# 17
# க்யாமத் எனும் இறுதித் தீர்ப்பின் நாள்

துரத்தி வந்தவர்களைத் திரும்பிப் பார்த்தான் ரெங்கராஜன். ஓடி வந்தவர்கள் தலைதெறிக்க, துரத்தி வந்து கொண்டிருந்தார்கள். கால்களில் இறக்கை முளைத்திருந்தது. காற்று வெகு வேகமாக காதோரங்களில் கிழித்துக் கொண்டு பறந்தது. அடுத்து தெரிந்த துலுக்கத் தெருவுக்குள் மின்னல் வேகத்தில் திரும்பினான் ரெங்கராஜன். கதவுகள் படபடவென்று சாத்திக் கொண்டன. ஜன்னல்கள் படீர் படீர் என்று அறைந்து மூடிக் கொண்டன.

தெருவில் முனிசிபல் விளக்குகளைத் தவிர வேறு எந்த வெளிச்சமும் இல்லை. இரவு பதினோரு மணியும் இருக்கலாம். ஒரு மணியும் இருக்கலாம். நேரம் கடந்த நேரம். இருட்டு ரெங்கராஜனுடன் பேசியது. பின்னால் ஓடி வருபவர்களின் கைகளில் எல்லாம் பிச்சுவாக்கத்தி, கோடரி, வீச்சருவாள், கொன்னருவாள், உளி, மண்வெட்டி போன்ற பல ஆயுதங்கள். திரும்பிப் பார்க்காமலேயே அவன் கண்களுக்குப் புரிந்தது. அவன் கையில் ஆயுதம் ஏதுமில்லை.

இரண்டுபுறமும் நீண்ட நீண்ட திண்ணைகள். சிங்கப்பூர் போய் வந்து கட்டிய கோட்டை கோட்டையான வீடுகள். ஒவ்வொரு வீட்டு வாசலிலும் பச்சை பச்சையா ஜண்டா தொங்கியது. வீடுகளில் மனிதர்கள் ஆழ்ந்த உறக்கத்தில் கிடந்தனர். ரெங்கராஜனுக்கு எப்போதும் வசதி, வழக்கமாக அவன் தப்பிக்கிற இடம் துலுக்கத் தெரு முக்குதான்.

எல்லாம் ரெங்கராஜன் ஓடி ஆடிப் பழகின பழைய துலுக்கத்தைக்கால் மேடு. அங்கே பாய்ந்து கொண்டிருக்கிற ஜியேகேனால் வாய்க்கால் மடுவில் இறங்கி நீந்தியபோது தடதடவென்று 20, 30 பேர் தண்ணீரில் அவனை ஆயுதங்களுடன் வளைத்துக் கொள்வது இருட்டிலும் புரிந்தது. இருட்டும்கூட ஒரு வெளிச்சமென்பது அவன் மட்டுமே அறிந்த ரகசியம்.

மண் உளிப்பாம்பு மாதிரி துடித்து மண்ணுக்குள் புகுந்துவிட்டால், அவனை யாரும் ஒன்றும் செய்ய முடியாது. சுற்றி வந்த ஆயுதங்கள் அவன் உடம்பைப் பதம் பார்க்க இருட்டில் நெருங்கி நெருங்கி வந்தபோது ரெங்கராஜன் தண்ணீருக்குள் படிப்படியாய் இருட்டுக்குள் ஆழ்ந்து போனது யாருக்கும் தெரியாமல் போயிற்று. 'திடீர் திடீர்' என்று வீச்சருவாள்கள் சுழன்றதும், 'தொபக்கடீர் பொபக்கடீர்' என்று 'திடீர் திடீர்' என்று தண்ணீரில் யார் யாரோ புரண்டதும், பிச்சுவாக்கள் கண்ட இடத்தில் சொருகியதுமாய் வாய்க்கால் தண்ணீரில் ஒரு 'த்வம்சமே' நடந்தது. ஆயுதங்கள் ரத்தம் கக்கின. ஆனால்

ரெங்கராஜனைக் காணோம். அரைமணி நேரம் பிடித்து இழுத்த பறியலுக்கும், இழுபறிக்கும் பின்னர் எல்லோரும் பெரும் கூச்சலுடன் திரும்பவும் இருட்டில் நாலுபுறமும் 'பிடி பிடி' என்று கூச்சலிட்டுக் கொண்டே திமுதிமுவென்று ஓடி திசைக்கொருவராய் மறைந்தது மாயம் போல் இருந்தது ரெங்கராஜனுக்கு.

நீண்ட நேர அமைதிக்குப் பின்னால்,மெல்லத் தலையெ நீட்டி வெளியேறி எல்லோரும் ஓடி விட்டார்களா? என்ற அச்சத்தோடு எதிர்புறமாய் பதுங்கிப் பதுங்கி தண்ணீர் சப்தமே எழும்பாமல் தண்ணீர் மேலேயே படிந்து எதிர்கரை ஏறி புதர் புதராய் பதுங்கி ஓடினான் ரெங்கராஜன். முதுகில் அருவாள் வெட்டு ரத்தம் கனிந்தது. இடுப்பில் துடைகளில், கால்களில் ஈட்டிக் குத்து, உதடு கிழிந்திருந்தது. எங்கும் எரிச்சல், எதிரில் தெரிந்த தெருவுக்குள் புகுந்து மீண்டும் ஓடினான்.

ரெங்கராஜன் பதட்டமே இல்லாமல் தெருவில் நடந்தான். பின்னால் துரத்திய கூட்டம் திரும்பி ஓடி வந்து கொண்டிருந்தது. ரத்தம் ஆறாக வடிந்து கொண்டிருந்தது. அவனால் நிற்க முடியவில்லை. ரத்த வாடைக்காக மோப்பம் பிடித்துக் கொண்டு எதிரே ஓடி வருபவர்களிடமிருந்து பக்கத்து திண்ணை ஒன்றில் காலை நீட்டி உட்கார்ந்திருந்த கிழவி ஹய்யத் பீவி அவனையே உற்றுப் பார்த்தபோதும் கூட அஞ்சாமல் பக்கத்து மூத்திரச் சந்தில் பாய்ந்தான். மூத்திரச் சந்தில் சின்னஞ்சிறிய இடுக்கு ஒன்றின் வழியே அவன் அடுத்த தெருவுக்குப் பாய்ந்தான்.

திமுதிமுவென்று ஓடி வந்தவர்கள் கண்களில் கிழவி பட்டாளே தவிர ரெங்கராஜனைக் காணோம். வந்தவர்கள் ஏதும் பேசாமல் சந்துக்குள் திரும்பாமல் இயல்பாகவே எதிரே ஓடி மறைந்தார்கள். கிழவி ஹய்யத் பீவி பொக்கை வாயைத் திறந்து இருட்டுக்குள் சிரித்தது சந்துக்குள் பாய்ந்துபோன ரெங்க ராஜனுக்குத் தெரியாவிட்டாலும் திண்ணை ஓரமாக இருந்த ஜன்னல் ஓரமாக உள்ளே குப்புறப் படுத்திருந்த நூரிப் பெண்ணுக்கு தெரிந்தது. ஜன்னல் கதவை ஒருக்களித்து திறந்து ஜன்னல் வழியாகவே வளைந்த அந்த சிங்கப்பூர் பித்தளைக் கம்பிகளின் வளைவுகளின் வழியே உள்ளிருந்தபடியே மூத்திரச் சந்துக்குள் பார்க்க அவளால் முடிந்தது.

அந்த ஜன்னலிலிருந்து அடுத்த ஜன்னலுக்கு வீட்டுக்குள்ளேயே பாய்ந்து ஓசைபடுத்தாமல் திறந்து எட்டிப் பார்த்து பதைத்தாள் நூரி. அப்புறம் அந்தக் கூடத்திலிருந்த 13 ஜன்னல்களை ஒவ்வொன்றாக திறந்து கொண்டே வந்து வீட்டுக்குள்ளேயே நடந்து கூடம், ஹஜான் உக்கிராணம் ஹாடிகானா பக்கம், தோட்டம் என்று நீண்டு போகும் அந்த தெருவின் பெரியதான அந்த வீடு ஒரு ஏக்கர் பரப்பில் அடுத்த தெருவை பின்புறமாகத் தாண்டி வீட்டுச் சுவர் நீண்டபோது, அதே சுவரில் இருந்த பல ஜன்னல்களை நூரி பதுங்கிப் பதுங்கி தாண்டி முன் கட்டுக்கு வந்ததும், அதிலிருந்த பதினெட்டாவது ஜன்னலை மெல்லத் திறந்ததும் அவளுக்கு வியர்வையில் பயமும், பயத்தில் திடுக்கமும், திடுக்கத்தில் ஆச்சரியமுமாய் பயம்! பயம்! பயம்! அவ்வளவுதான்.

அந்த ஜன்னலைப் பயம் மட்டும் அவளைத் தாக்க அசந்து போய் ஜன்னலுக்கு வெளியே என்ன நடக்கிறதோ? அதைக் காண கதவை ஒருக்களித்து ஆளுயர ஜன்னலில் அவள் நிற்பது தெரியாமல் ஜன்னலிலேயே ஒளிந்து கொண்டு, வெளியே பயங்கர கூச்சலுடன் பத்து, இருபத்தைந்து பேருக்கு மத்தியில் ரத்த விளாரான உடம்புடன் ஒரு நீண்ட சிமெண்டு தடி ஒன்றை வைத்து கொண்டு, ஆயுதங்களுடன் மோதிக் கொண்டிருந்த ரெங்கராஜனைப் பார்த்தபோது தன்னையறியாமலேயே ஜன்னல் கதவை மூடி அதன்மேலேயே சாய்ந்து கொண்டாள் நூரி. மறுபடியும் மறுபடியும் ஜன்னலைத் திறந்து கண்களை மட்டும் வெளியே நீட்டியபோது இப்போது காட்சி மாறியிருந்தது.

ரெங்கராஜன் ஆளுகளைப் பந்து பந்தா சுருட்டி அடிக்கிறதப் பாத்தா பயமா இருந்தது. அது என்ன கையா? இரும்பா? கதவை மீண்டும் அழுத்தமாய் பிடித்துக் கொண்டு நின்றாள் நூரி. இப்போது ரெங்கராஜனை நன்றாகப் பார்த்தாள், அப்பா! எல்லோருடைய குடல்களையும் மாலையாக கழுத்தில் மாட்டிக் கொண்டாற் போல யாரோ ஒரு ஜின் நிற்கிற மாதிரி இருந்தது. யார் இவன்? என்ன சண்டை? என்ன ஜாதி? என்ன மதம்? என்ன இனம்? எதுவும் தெரியாது. இருட்டில் எத்தனை பேர் என்றும் புரியாது. இது அவள் பகலிலும் சகஜமாய் பார்க்கிறதுதான். திடுதிடு என்று ஓடி வருவதும், ஒருத்தரை ஒருத்தர் வெட்டிக் கொல்றதும் இப்புடி பர்தா முக்காட்டுக்குள்ளிருந்து அவள் பார்க்கிறதுதான்.

திடீரென்று ஓட்டமாய் ஓடி வந்து ஆட்கள் சுற்றிலும் மறித்துக் கொள்கிற ரெங்கராஜனை அவள் இப்படி கோரமாய் பார்த்தில்லை. அடிக்கிறதும், உதைக்கிறதும் அவள் பார்த்துதான் தெரிந்து கொண்டிருக்கிறாள். அவளுக்குப் பின்னால் யாரோ நானிமா கூப்பிடுகிறது மாதிரி இருந்தது. வாப்பா பார்த்தால் கொன்னே போட்டுவிடுவார். எல்லோரும் தூங்குகிறார்கள். அவளுக்குத் தூக்கமே இல்லெ. தூக்கம் வராமல் போய் 4,5 வருசங்கள் ஆகிறது. அவளைப் போல திரண்ட பெண்கள் ரொம்ப கொஞ்சம். ‘நிக்கா’ வருது வருதுன்னாங்க. ஆனா கொமராவே வெச்சிருக்காங்க. வாப்பாவுக்குப் போன மாசம் கூட ஒரு நிக்கா நடந்தது. இது எட்டாவது நிக்கா. சிவப்பா தமிழ் தெரியாத 18 வயது பொண்ணான பல்கீஸ் ஜன்னத் என்கிற அந்த அரபி பெண்ணை ‘உம்மா’ என்று கூட அழைக்கச் சொல்லி பெரிய உம்மா, நடு உம்மா, எல்லாம் அவளைத் திட்டினார்கள். ஜன்னத்தைவிட 5 வயசு மூத்தவள் இந்த நூரி என்று ஏன் யாருக்கும் ஞாபகம் இல்லை. ஜன்னத்துக்கும் ஒரு ஆதம் பெறந்துட்டான். நூரிக்கி அடி வயிறு நொந்தது.

கிழவி ஹய்யத் எப்போதும் பொக்க வாயைத் திருப்பிக்கிட்டு சிரிக்கும் ‘‘ஒங்க வாப்பாக்கு இன்னும் நூத்தம்பது நிக்கா இருக்குடி பாக்கி. அப்பக்கூட நிக்கா ஒனக்கு இராது. ஊடு பூரா காசு பாசி புடிச்சி போயி கெடக்கு. செலவு பண்ணி கையி தான் பத்தலெ. ஒங்க வாப்பாவுக்கு குட்டி போடுறதுக்கே நேரம் பத்தலெ.’’ - என்ற ஹய்யத் கிழவி உடனே பயந்து கொண்டே ‘‘நாஞ்

சொன்னேன்னு சொல்லிடாதே. என்னைத் தூக்கி ரோட்ல எறிஞ்சிடுவான் ஒங்க வாப்பா. அப்றம் ஒரு போகிணி ப்ருனிக் கஞ்சிக்கு கூட வழியில்லாம போய்டும்'' என்ற பேச்சுகளெல்லாம் அவள் காதுகளில் எப்போதும் ஒலிக்க மீண்டும் ஜன்னல் கதவை ஒரு கையால் ஒருக்களித்து காரணமில்லாமலேயே திறந்து பார்த்தாள் நூரி.

தெருவில் இப்போதும் யாரையும் காணோம். எதிர் திண்ணையில் குப்புறக் கிடந்த ரெங்கராஜனின் உடம்பின் முதுகுப் பாகம் அவளைப் பயமுறுத்தியது. முதுகு ரெங்கராஜனுடையதுதான் என்று அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. மற்றவர்களை எல்லாம் காணோம். எல்லாரும் ஓடிக்கிட்டு இருந்தார்கள். மற்றவர்கள் எங்கே? மற்றவர்கள் யாரும் திரும்பி வர மாட்டார்களா? அந்த பெரிய கை கால்கள் நீண்டு நீண்ட விரல்கள், வியர்த்து பளபளத்த அந்த முதுகு, பெரிய பாதங்கள், பருத்த துடைகள், தூண் போன்ற கால்கள், எல்லாமே அவளுக்குப் பல நாட்களாய் அடையாளம் தெரியும். பெயர்தான் தெரியாது.

அந்த ஜன்னல் கம்பிகள் அவள் மார்பைத் தாங்கி மகிழ்ந்தன. கம்பி இற்று விழுந்துவிடுமோ ரெங்கராஜனுக்குத் தெரியாது. எல்லோரையும் அடித்து துரத்தி விட்டுதான் அந்த தேகம் விழுந்தது என்றால், அவளும்தானே நம்ப மாட்டாள். ஆனால், போலீஸ் ஸ்டேஷன் ரெக்கார்டுகளில் அவன் திறமைகளை ரெங்கராஜன் அடி, ரெங்கராஜன் பிடி, ரெங்கராஜன் இடி, என்று பல கேஸுகளில் சரித்திரப் புகழ் பெற்றிருக்கிறது. அடிக்கிறதும், உதைக்கிறதும் அப்டி ஒரு தனீ மாதிரியாய் இருக்குமோ?! போலீஸ் ஸ்டேஷன் எப்போதும் ரெங்கராஜனுக்குத் திறந்தே இருக்கும்!

நூரி கதறி அழுதாள். பயத்துல தெரு மொகனையில பத்து பன்னண்டு பேரு திமுதிமுன்னு அடிச்சுக்குவானுவ. குத்தியீட்டி கம்பு, சுருளி, வீச்சருவாள், குந்தம், மடு, கட்டாரி எல்லாத்தையும் தூக்கிகிட்டு வந்து குத்திகிட்டு அந்த தெருவே திமிலோகப்படும். ஒத்தைக்கு ஒத்தையா நின்னு பாய்வான் ரெங்கராஜன்.

பத்து நிமிஷத்துல ஒவ்வொருத்தனையா சுழட்டி சுழட்டி தரையில மோதி ஒருத்தன் ஒருத்தனா புடிச்சு காலுக்கு கீழ வச்சு முழங்காலாலெயே அவன் பிடரி எலும்பை ஒடிக்கிறது ரெங்கராஜன் புடின்னு சொல்லிக்குவானுங்க. தூள் பறக்கும். பத்தே நிமிஷம் ரெங்கராஜன் வெளீல வந்துருவான். கூட்டம் சிதறி ஓடும். கழுத்தெலும்பு ஒடிஞ்சு ரத்த விளாரா நாலஞ்சு பேரு ரோட்ல மல்லாந்து கெடப்பானுவ.

"அட! இஞ்ச நின்ன ஜனமெல்லாம் எங்கே போச்சு?'' திடீர்ன்னு பூமிக்குள்ற போய்ட்டானுவளா? யாருக்கும் தெரியாது. ஒரு ஈ காக்கா அஞ்ச இருக்காது. போலீஸ் வரும்போது சாட்சிக்கு ஆள் கிடைக்காது. கேசுல புக் பண்றதுக்கு கூட அஞ்ச ஒருத்தன் சிக்க மாட்டான்.

ஜன்னல் வழியா ரெங்கராஜன் ஆளுங்களைப் பந்தா சுருட்டி அடிக்கிறதப் பாத்துப் பாத்தே அவனோட பேச ஆரம்பிச்சா நூரி, நூரியைப் பார்த்ததும்

அவன் பேசீடுறவன் ஒண்ணுமில்லெ. முஸ்லீம் பொண்ணுல்ல? பர்தா முக்காட்டுக்குள்ள இருக்குற அவளெ அவன் பார்க்க முடியுமா? முடியும்!

ஒதுங்கின சந்து ஜன்னல் கதவு வழியாகத்தான் எல்லாமே நடந்தது! ''அவ மட்டும் பாக்கலாமாக்கும்?!'' பர்தாவுக்குள்ளயே உள் அவளுக்கு உலகம்!! ஆனா சந்துக்குள்ளதான் அவள் உலகம்! ஜன்னல் வழியாக அவள் உலகத்தையே வாங்கிக் கொண்டு விட்டாள்.

தெரு வீதிச் சண்டை முழுசும் வீதியில் இருக்கும் கூட்டம் பார்த்துக்கிட்டே நிக்கும்போது, ஜன்னல் விளம்பில் ரெண்டு 'புறாக் குஞ்சு' உட்கார்ந்திருந்தது. பார்தாவுக்குள், சிங்கப்பூர் சில்க் முட்டாய்க் கலர் ஜரிகைப் பின்னல் ஜாக்கெட் ஜாக்கெட் முழுதும் பொட்டுப் பொட்டாக கண்ணாடி, குஜிலி பொட்டு ஒட்டி தைத்திருந்தது. அடங்காத சுருண்ட கருப்புக்கூந்தல் பட்டு ஜரிகை, லேஞ்சி வைத்து பின்னின தலைமுடி, அடுக்கடுக்கா குண்டு மல்லிகை பந்து பந்தா ஓவியம் மாதிரி, கோடு கோடா வைரம் கழுத்தில்.

இத்தனை சின்ன ஜன்னல் பிளவுக்குள் இத்தனையும் காட்டுவாளா? பார்க்க முடியுமா?

ரெங்கராஜன் ஏதாவது ஒரு சந்து வழியா தப்பி ஓடிடுவான். ரெண்டு நாளா அப்றம் போலீஸ்காரன்களோட நடமாட்டம்தான் இங்கே திமிலோகப்படும். விசாரணையெல்லாம் தெருவில தடபுடல்படும். யாராவது ஒருத்தர் வீட்லருந்து மேசை, நாற்காலி, இன்னொருத்தர் வீட்லருந்து சாப்பாடு, இன்னொருத்தர் வீட்லருந்து பாய் தலைவாணி, மற்றொருவர் வீட்டுத் திண்ணையில் படுக்கை பாய் தலைவாணி போட்டு வெச்சுக்கிட்டு அங்கேயே போலீஸ் ஸ்டேஷனே இஞ்ச வந்துட்டுது. நாலு நாளைக்கு ரெங்கராஜனை எங்கையுமே காண முடியாது. அந்தப் பக்கம் பாக்க முடியாது. ஜன்னல் கம்பிகளுக்கு நூரியோட உடம்பு சூடு புரியும். கம்பிகளுக்கிடையில நூரியோட கன்னம் அழுந்தி செவப்பு செவப்பா அவள் ஆசை பலியாகும்.

கம்பி வழியா யாரும் பாக்காமெ ஒருக்களிச்ச கதவுக்கு அப்பால் நூரி கண்கலங்க பயத்தோட பாத்துக்கிட்டே இருப்பா. ஆனா அவளெ யாரும் பாக்கவே முடியாது!

''ரெங்கராஜன் ஒரு அடியாள்!''

''நூரி ஒரு முஸ்லீம் பெண்குட்டி!''

''அதனாலென்ன?''

ஜன்னல் ஓரம் உள்ள திண்ணையில முன்புறமா திண்ணையில பத்து ப்சங்க எப்போதும் உட்கார்ந்து அரட்டை அடிச்சிக்கிட்டு இருப்பானுவ. தெருப்பெரிய மனுஷனுங்க கண்டுக்க மாட்டானுங்க! எதுக்கு வம்பு? கையெ நீட்டுவான் மரியாதையோட போயிடுறது நல்லது. திடீல்ன்னு எல்லாம் அடிச்சுக்குவானுவ. தகராறு எதுக்குன்னு மரியாதையோட போயிடுறது நல்லது. யாருக்கும் தெரியாது.

தெருவுல உக்காந்து குத்தாபந்து விளையாட்டு வெளையாடிகிட்டு இருப்பானுவ. எவனாவது பெரிய மனுஷனுங்க வூட்ல கடையில இருந்து கூப்பிட்டு கோடன்லயிருந்து கூப்ட்டு ஆள் வரும். நூரிக்கி எல்லாரையும் தெரியும். பர்தா போட்ருந்தா என்ன? எல்லா விஷயமும் அதுக்குள்ள அடக்கம். வாழ்க்கையை மூட எவனால முடியும்? மூடுறதே கூட தெறக்கத்தானே? பெரிய பெரிய கண்கள் நூரிக்கு! ஏகப்பட்ட சுர்மாமை எழுதி மைலாஞ்சி பூசி அரபி ஒடம்பெத் தமிழ் ஒடம்பா மாத்தி எழுதி சித்திரமா வளத்திருக்கா உம்மா மைமுனாபீவி. மைமுனா பீவிய வாப்பா அரபி மண்ல நிக்கா பண்ணிகிட்டு யாபாரத்தெ லாபமா முடிச்சுகிட்டு இந்தியா வந்து பத்து பசங்களப் பெத்து அப்பறமா கடைக்குட்டியா நூரியெப் பெத்தெடுத்துப் போட்டப்போ தஞ்சாவூரே மூக்குல வெரல போட்டுது.

மைமுனாபீபிக்கே அறுவது வயசுக்கு மேலேன்னா வாப்பாக்கு என்ன வயசு?! நெய்யப்பம், கலகலா முட்டை ஹல்வா, திக்டின்னு நெய்யும் இனிப்புமா சாப்புட்டு வளந்தவ நூரிப் பொண்ணு! நூரி படிக்கல எழுதல்லெ ஆனா ரெங்கராஜனை நெனைச்சாலே வெரல் எழுதும். தன் உடம்புல தானே வரைஞ்சு தள்ளும். தன் உடம்பெத் தானே தடவி விட்டுக்கணும்ன்னு அவளுக்கே தோணும். நூரி மேல யார் கண்ணுதான் விழாது. துள்ளிக் குதிச்சு ஜலங்கை எட்டு வீட்டுக்குக் கேக்கும். அப்பப்ப சந்து மொகனைக்கு ஒரு ஓட்டம். சந்து மொகனை கடைல ஒரு மிட்டாய்! ரெண்டு கறிவேப்பிலை ஆர்க்கு குழம்புக்கு வேணுமா? பின் கதவு வழியா ஒரு ஓட்டம்! ஒரே ஒரு முட்டை வாங்கிகிட்டு ஓட்டமாய் ஓடி வந்து தானே தீ எரிச்சு முட்டை தைலம் எடுக்குறது. ஒரு ஓட்டம்!

மொகனை கடைல கலர் நூல் வாங்க முட்டை தைலம் எடுத்த ஒடனே எதுர் வீட்டுத் திண்ணைக்கி ஒரு பாச்சல். எதுர் ஊட்டுப்பாட்டி (நாநிதிக்கு) சாலா முட்டைத் தைலம் தேச்சு உருட்டி விட்றது! ஹய்யத் கிழவிக்கு நூறு வயசு. நூரிக்கு உசிர் அவ! ஹய்யத் கெழவிக்கு ஒண்ணும் நூறு வயசு இல்லெம்பாங்க தெருல! நிஜமா நூறு தாண்டினவ! (நாநிம்மா) திண்ணையிலேயே அது கெடக்கும். தெருவுல திரியும், எல்லாருக்கும் சொந்தம். நூரி இந்தப் பாம்பாட்டித் தெருவுக்கு முத்தலிப் போட வந்ததும் முஸ்லீம் தெரு மறந்தாலும் நாநிம்மாவை மறக்க முடியாது. முஸ்லீம் தெருலயிருந்து நூரியெ இழுத்துகிட்டு வந்து நாஜ்மாவோட குடிசையில ஒளிச்சு வெச்சு நிக்கா பண்ணி, அஞ்சியே மறைச்சு வெச்சப்போ கூட ஹய்யத் பாட்டியெ மட்டும்தான் இன்னமும் இப்பமும் மறக்க முடியல்லெ.

பேரீச்சம் பழம் மாதிரி உடம்பு பூராவும் சுருக்கம். பல்லில்லாத பொக்கை வாயில் எப்போதும் எச்சில் வடியும். நெத்தியில ஆயிரம் கோடு, குறுக்கு சாரியாவே நூறு ரேகை. எப்போதும் நாநிம்மாவுடன் தான் நூரி இருப்பா! ''திங்கு திங்குன்னு கொமருப் பொண்ணுங்க ஓடப்படாதுடீ நூரி!''

''அப்டியே ஓட வேண்டி ஆயிப்போவுண்டீ பொண்ணே! இஞ்ச வா!'' - நூரி வந்து ஹையத் கெழவி பக்கமா ஒக்காருவா. ஹையத் நூரியோட தலை

முடியை அவுத்து சாட்டை அடிக்கிற மாதிரி அடிச்சு கோதி உதறிப் பின்னி விடும் கிழவிக்கு இப்பவும் தலைமுடின்னா ரொம்ப உசிர்! நூரிக்கு ஆச்சர்யமா இருக்கும். நூத்துக் கெழவிக்கு கூந்தல் இல்லேன்னு யார் அழுதாங்க!? ஹையத் கெழவிக்கு ஆரும் இல்லெ. வீட்டுத் திண்ணையில இருந்து கிட்டே கார்வார்! எல்லாருக்கும் ஹையத் கெழவி வேணும். ஹையத்துக்குத் தெரியாம அஞ்சு ஒண்ணும் நடக்காது.

''ஏண்டீ நூரி! காபிர் பசங்களோட ஒனக்கென்னடி பேச்சு? நாயெ!''

''ஆரு சொன்னாங் நாநிம்மா! அவரு ஒண்ணும் காஃபிர் இல்லெ!''

''நாநின்னு என்னெக் கூப்புடாதெடீ... ஒப்பனுக்குத் தெரிஞ்சா... அல்லாஹு!''

''என்ன சொல்றே நாநிம்மா?''

''அந்த பயல் ரெங்கராஜுகிட்ட சந்துக்குள்ள நின்னு ஒனக்கென்னடீ பேச்சு?'' நூறு வயசு கிழவிக்குப் பார்வையெப் பாரேன்! எப்டித் தெரிஞ்சிது? நிஜம்தான்.

''அவருதான வந்து பேசுறாரு நாம் பேசல்லெ!''

''தெருவே இருண்டு கெடக்கு அவங்கிட்ட பேசிட்டு நிக்கிறயே. மைமு பொண்ணாடீ நீ? வெக்கங்கெட்டவளே! மைமுனா உசிரோட இருந்தா இப்டி உடுவாளா?''- கிழவிக்குக் கண்களில் கண்ணீர் உதடுகளில் நடுக்கம். உடம்பில் ஒன்றுமில்லை. பேரீச்சம் பழக் குலைகள் நடுங்கின. ஹையத் பீபிக்கு (நாநிம்மா) இரண்டு நிக்கா ஆகித் தலாக்கும் ஆகிவிட்டிருந்ததாம். தெருவுல சொல்லுவாங்க. நாநிம்மா மேல நூரிக்கு எப்பமும் இப்பமும் உசிர்தான். அன்பா அது? அது அவர்களுக்கு இன்னது என்று தெரியாது. உம்மா போனதிலிருந்து நாநிம்மாதான் மீதி.

பள்ளிவாசல் வழியே நாநிம்மாவின் பிணம் கபரிஸ்தானுக்குப் போனபோது நூரி அந்தத் தெருவுலயே இல்லெ. முத்தலிப்போட ஓடிப் போய்ட்ட'வளா'கிப் போனா. ராஜ்மாதான் வந்து சொன்னா 'உன்னோட' நாநிம்மா கஃபருக்குப் போயாச்சுன்னு.

''அல்லா!''

ரங்கராஜனுக்குப் பயமாயிருந்தது நூரி கதறியது. அவளுக்கிருந்த ஒரே 'அத்து' நாநிம்மா. இனிமே நாநியெப் பாக்க முடியுமா?

சாய்ந்த நிழலில் இருட்டில் யாருக்கும் தெரியாமல் நூரியைத் தொட்டபோது முஸ்லீம் இளைஞர் பலருக்கும் வீரம் வந்தது. ரெங்கராஜன் பத்து வயதில தெருவில் இறங்கியவன் என்று சொல்வார்கள். தெருப் பயலாகத்தான் அவன் பிறந்ததே. அவன் ஜாதி இன்னது என்று சொல்லித் தந்ததே அவன் அம்மா அல்ல. ஏன்? அவளுக்கே அது தெரியாது. பழக்காரியாக அவள் திரிந்தாள். பழம் விற்றாள். கனியாக நாளாகவில்லை. பழுத்தபோது உதிர்ந்தாள். யார் இட்ட விதை? தெரியாது! அவளுக்கே தெரியாமல் உதித்தான். உதிரத்துள் வளர்ந்தான். அழுதான். சிரித்தான். குழந்தைப் பேறு இரண்டு.

கவர்ன்மெண்ட்டு ஆஸ்பத்திரியில் ரத்தம் சுனையாய்ப் பீச்சியடிக்க அதிலேயே நனைந்து குளிர்ந்து போனாள் ஒரு குழந்தையுடன். மீதி ரெங்கராஜன். ரெங்கராஜனைக் கையேந்தி வாங்கிக் கொண்டது நர்ஸ் ராஜம். ரெங்கராஜன் என பெயரும் அவள் வைத்ததுதான். படிக்க வைத்தாள். படித்தான். பள்ளிக் கூடத்திலேயே காங்க் லீடர் என்று பட்டம்!

அடி உதைகளில் குட்டு உடைக்கிற மோதல்களில் அபார ப்ரீதி! ராஜம் கல்யாணமில்லாதவள்!? பிள்ளையில்லாதவள். (பதினாறு வயதுக்கு முன் கல்யாணம் செய்து பதினேழாவது வயதில் தாலியறுத்து மூலையில் முடங்கிய ப்ராம்மணப் பெண்)- படிக்கக் கிளம்பி பிழைப்புக்காக நர்ஸாகி காலம் கடந்து முதிர்ந்த தடித்துக் கொழுத்து - வாழ்க்கை வசதிகளை அனுபவித்து தனியே ஒதுங்கிய பின் - ஒரு மகன் இருந்தால் தேவலை என்று தோன்றியபோது ரெங்கராஜனை ரத்தத்திலிருந்து எடுத்து கழுவி எடுத்துக் கொண்டாள். அம்மா என்று சொல்லிக் கொடுத்தாள். அவன் சொல்ல மறுத்தான். வற்புறுத்தினாள். ''அம்மா! அம்மா! அம்மா சொல்லு! அம்மான்னு அழைடா கண்ணு! அம்மம்ம்மா! அம்மம்ம்மா!'' - சொல்லிச் சொல்லி வாய் வலிச்சதுதான் மிச்சம்.

ரெங்கராஜன் அம்மாவை அம்மா என்று மட்டுமல்ல வேறு எந்த முறையிலும் அழைக்கவேயில்லை. ''அம்மா எங்கேடா?'' என்று கேட்டால் '' 'அது' ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கு'' என்பான். நாலு வயசுப் பிள்ளையாய் இருக்கும் போதே ராஜத்தை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிப்போக ஜட்கா வண்டி வந்து காத்திருக்கும். ரெங்கராஜனைக் கொஞ்சி விட்டு ஜட்கா ஏறக் காத்திருப்பாள் ராஜம்.

புழுதியில் புரண்டு சண்டை போட்டு தெருப் பொறுக்கிகளுடன் உருண்டு புரண்டு கொண்டிருக்கும் சிறுவர்களின் நடுவே வித்யாசமாய் பணக்களையுடன் காணப்படும் ரெங்கராஜனை வியப்புடன் பார்ப்பார்கள் சுற்றிலும் நிற்பவர்கள்! ''அம்மா கூப்புட்றாங்க வாடா!'' என்று யாராவது இழுத்துக் கொண்டு வரும்போது இவனை ஏன் வளர்க்கிறோம்? என்று புரியாது திகைப்பது ராஜத்தின் சாவுப் படுக்கையிலும் கூட நேர்ந்தது.

கல்லூரியிலும் மேல் படிப்பிலும் கூட ரெங்கராஜன் அடியாள்களுடன் ரௌடிகளுடனும்தான் புரண்டு திரிந்தவனாய்தான் எப்போதும் ராஜத்துக்கு நன்றாகத் தெரியும். இன்னும் பெரிய ஆச்சர்யம். அவனே அதை அவளிடம் சொன்னது.

நூரி கேட்பாள் - ''மாமு! எல்லாத்துக்கும் ஒத்துகிட்டு என்னெக் கட்டிகிட்டீங்களே ரப்பே! தெருச் சண்டையெ மட்டும் உடாமெ என்னெக் கொல நடுங்க உடுறீங்களே! எத்தினி படிச்சிரிக்கிறீங்க? ஒரு நல்ல வேலைக்கிப் போயி நல்லா அழகா இரிங்களேன். ஒழுங்காப் பொளைக்கக்கூடாதா?''

''எனக்கு அதெல்லாம் புடிக்கல்லெடீ குட்டீ!''-

''குட்டிங்காதிங் மாமு! பொறுக்கித்தனமா இருக்கு!''

''எனக்கு அதாம் புடிக்கிது!''

ரெங்கராஜனை அப்பப் பாத்தா வினோதமாயிருக்கும். என்ன மனுஷன் என்றும் இவனும் மனுஷனா என்றும் தோன்றும். நிதமும் ராத்திரியெப் பகலாக்கிகிட்டுத் திரியிற பொழைப்பு நூரிக்கு ஓங்கரிச்சு வரும். - ரத்தக் கறையோட அவன் கழட்டிப் போடுற சட்டை வேட்டி யெல்லாம் துவைச்சு அலசும்போது - கண்ணுல தண்ணி முட்டிக்கிட்டு வடியும். நூரி - ரெங்கராஜன் கல்யாணம் நிக்காவா ஆனதே கூட ரெங்கராஜனால இல்லெ.

ரெங்கராஜன் முத்தலப்ஃபு ஆனதும் நூரி இஷ்டம்தான்! ரெங்கராஜன் முஸ்லீமா ஆனதும் - அவளோட இருக்குறதும் எல்லாம் நூரியோட கட்டாயம். நூரி யோட ஆசை - நூரியோட தீர்மானம். நூரி கட்டிவிட்ட வேஷம் நிஜம்! பசி! அவளோட வாழ்வு! ராத்திரி வரும் போதுதான் ரெங்கராஜனா முத்தலிஃப்பான்னு தெரியும்! எப்டி இந்த மாதிரி இருக்க முடியும்ன்னு அடிக்கடி தோணும். ரெங்கராஜனுக்கு எந்த கெட்ட வழக்கமும் கெடையாது. எல்லா கெட்ட சகவாசமும் உண்டு. இருந்தாலும் எல்லாரும் ஒரே மாதிரி "முத்தலிஃப்பா? அவனா? மொரடன்! திமிறு புடிச்சவன். ஊமை. ஆளெ அடிச்சி கீள உழ வைக்க முடியாது. நல்லவனாச்சே!" எல்லா மொதலாளிங்களுக்கும் அடியாளுன்ன ஒடனே யாவகம் வர்றது முத்தலிஃப்புதான்! எல்லா மொதலாளிகளுக்கும் ரெங்கராஜன் வாண்டாம் அடியாளு முத்தலீப்பு வேணும்! ஆளுலயும் ஆளு எல்லா மொதலாளிகளுக்கும் தீத்துக் கட்ற வேலைக்கெல்லாம் சுமக்க ஆளுவாண்டாமா?

"முத்தலிப்பு!"

ஜன்னல் ஓரமா அழைப்பு கேட்டுது.

திரும்பி நூரியெப் பாத்தான் ரெங்கராஜன். அப்பப்பா! சின்ன இடைவெளி அதுல முழுசா நூரி. தலைக்குள்ள சந்தேகம் சுருக்குன்னு குத்துது. பெரிய எடத்துப் பொண்ணு இவ! போட்டா மார்க் பீடி செய்துள்ளா மொதலாளி ஊட்டுப் பொண்ணு. ஏதுக்குக் கூப்புட்றா? வெஷம் இருக்கு. கண்ணுல தெரியிதே! அடேயப்பா கண்ணு, காது, மூக்கு எல்லாம் நகை வைரம் பளபளன்னு கயிலெ கூட அடுக்கடுக்கா செம்மஞ்சுளா அரபித் தங்கம். மூக்குல வைரம்! முஸ்லீம் பொண்ணு. பாக்கப்படாது மூடிக்குவாங்க! இவ ஏன் இப்டிப் பாக்கணும்? இப்ப மூடல்லெ! மூடமாட்டா! இவளெ மூட முடியுமா எவனாலியாவுது? மூட முடிஞ்சதெத்தான் மூடலாம்?!

அவ தெருவுல ஓடித் துள்ளி வரும்போதெல்லாம் ரெங்கராஜன் பார்த்திருக்கிறானே!

இது வேற! 'வேற பார்வெ'-வேற பொண்ணு-இப்ப! அவனோட பாயப் போற மான்! பளிச்சின்னு புரிஞ்சிது! அவளுக்கு இவன் வேணும்! நம்ப முடியல்லெ! பொண்ணாச்சே! ஜன்னல் ஓரமா நின்னான் ரெங்கராஜன். - ஜன்னல் உள்ற இருந்து இனிமையா...

"அய்யங்கடையில நகைக்கடை சந்துல செதம்பரஞ் செட்டியார் கடையில நகை செய்யக் குடுத்திருக்கு... ஆளு இல்ல வூட்ல வாங்கியாற- வாங்கியாந்து தருவீங்களா?"

மெல்லிசான குரல் மூக்கு நுனி வியர்த்து கன்னம் சிவந்து அட! குனிஞ்சு அவ மூச்சு அவன் மேல வீச அவள் தொட்டு ஜன்னல் பிளவு வழியாக என்னன்னமோ கொடுத்தாள் எதை எதை எல்லாமோ... ரசீது ஒண்ணும் முக்கிய மில்லெ ஏன் நகையே கூட அவசியமில்லே அவன் வேணும்... தினமும்...ஏதாவது கொடுத்து ஏதாவது வாங்கி அவனை கெவுரு பண்ணி "அல்லா!" - அவள் மூச்சின் ஏக்கம் புரிந்தது அவனுக்கும்.

அப்புறமா தனிய்யா கண்ணீரோட ஒக்காந்திருக்க நூரியெ நாஜ்மாதான் வெரட்ட ஆரம்பிச்சா. நாஜ்மா ஊட்டுக்குப் போயி குடிசைக்குள்ள கொல்லைப் பக்கமா வர்ற ரெங்கராஜனுக்காக காத்திருப்பா நூரி. ரெங்கராஜனோட பேச முடியாது பேசுற ஆள் அவனில்லெ. பேசத் தவிப்பா நூரி. நூரியெப்பாத்ததும் பாஞ்சு வருவான் ரெங்கராஜன். சீறுவா நூரி! ஏனோ ஒரு பயம்! ஒரு எரிச்சல் இன்னதுன்னு புரியாமெ தூர விலகி... பாஞ்சு பிடிச்சும், ஹூம் முடியாது! நூரி மின்னல்! கையால் புடிக்க முடியுமா? ஆனா ரெங்கராஜன் மேகமாச்சே! வசப்பட மாட்டானே அப்பறம்?

நூரி இருட்டுல அவன் கையில வழுவுண்டு தப்பிச்சா - அவன் எரிச்சலோட போய்டுவான். ஒரு வாரம் பதனஞ்சு நாள் நூரி காத்துக் கிடந்தே அழணும். நாஜ்மா எச்சரிக்கை பண்ணிகிட்டேயிருப்பா:

"டீ நூரி! மச்சான் ஒரு மாதிரி ஆளுடீ? துனியால வேற பொண்ணுங்க நெறைய்ய இருக்கு! ஆமா! சீக்கிரமா வளைச்சுப் போட்டுடு! இல்ல எவளாவது காஃபிர் ரங்கராஜ மச்சானெ தட்டிகிட்டு போய்டுவா!" நாஜ்மா விடாமல் தனியே ரெங்கராஜனிடமும் இதையே வேற மாதிரி உரு ஏத்தினாள் இப்படி.

"மச்சான்! நூரிக்குட்டி முஸ்ஸல்மானிப் பொண்ணு பட்டாணி! என்னெ மாறின்னு நெனைச்சுப்புடாதீங்க. இழுத்தா இழுத்தபடி வர்றதுக்கு! புடிச்சு கசக்கீறலாம்ன்னு நெனைக்காதீங்க! பெரிய பணக்காரி வேற, ஆசெ வச்சிட்டீங்க! அவளெ இப்ப நீங்க உட்டுட்டீங்கன்னா அப்டியே - கொடி - வேற செடியிலெ படர்ந்து பூத்துடும்! அப்றமா அல்லான்னாலும் ஆவாது அவ தத்கீர் அப்டி! பாத்துப் போங்க தெருக்காடு சுத்தி மல்லடிக்கிறதெ உட்டுட்டு ஆவுற காரியம் பாருங்க மச்சான்! உட்றாதீங்க!" நூரிக்கு லத்தீஃப் மொறை மாப்பிள்ளை.

அவனும் தெருவுலதான் திரிஞ்சு கிட்டிருந்தான். முஸ்லீம் வேற இந்து வேறன்னு இல்லாமெ நெருக்கமா குடிகுடியா குடிக்குள்ள குடியா இருக்கிற இடம் பாம்பாட்டித் தெரு! கீழ வாசல்! அங்க இருந்து ஆட்டு மந்தைத் தெருவுல தொடங்கி பத்து தெரு - ஆடக்காரத் தெரு கடைசி வரைக்கும் பெரிய பெரிய முஸ்ஸல்மான் குடிங்கதான் பெரிசு பெரிசா ஊடுகட்டி அடச்ச எடம். தனியா தெரியும். ஏராளமான சந்து. ராத்திரி சந்துக்குள்ள பூந்தாச்சின்னா கண்டுபிடிக்கிறது ரொம்ப கஷ்டம். பசங்க வெரட்டிகிட்டு வருவானுவ திமுதிமுன்னு! ரெங்கராஜனுக்கு எல்லா எடமும் தெரியும். எல்லா வியாபாரி மொதலாளி இண்டு இடுக்கும் புரியும்.

"ரவ்பூப் மொலாளி கூப்பிட்டது!"-

''வாப்பா ரெங்கராஜு!''

''சொல்லுங்க மொலாளி!''

''அரிசிக்காரத் தெருவு காந்திப் பய ரொம்ப அல்ட்டிக்கிட்டுத் திரியிறானாம். ஒரு புடி புடிச்சு உட்டீன்னா போதும் - திமுறுனான்னா கோழியடிச்சிடு! குபாராப் போய்டாம வெளிய உடாம அளுத்தீடு!''

''ராவு காலக்காளி கோயிலு வழியாத்தான் வருவான் போட்டுத் தள்ளீட்றேம் மொலாளீ!'' - ''புடி இதெ!'' - அடுக்காய் நோட்டுக்கள் கைமாறும். நூறு இருநூறு ஆயிரம் ரெண்டாயிரம்... ஒரு டம்ளர் பால் உள்ளேயிருந்து வரும்! 'மொதலாளி' முன்னால ரெங்கராஜன் அதெக் குடிக்கணும். பால் குடிச்சாப் பாதகம் நெனைக்க மாட்டாங்களாமே! பால் குடுத்தே... பல குடியெ அழிச்சவனாச்சே ரஃவ்வூப் மொலாளி!

நடு ராத்திரி ஜன்னல் தெறக்கும் - எதுர் திண்ணையில யாரும் இருக்க மாட்டாங்க. நாநி கூட எங்கியாவுது போய்ருக்கும். கீழ வாசல் ப்ராந்தியமே மங்கிப் போயிருக்கும். இருட்டு - மங்கல் வெளிச்சம். குத்பு சந்துல நெழல் கட்டுது. எதிர நாநிம்மா நடந்து வரும்போது இருட்ல நிக்கிற ரெங்கராஜனெ அது அடையாளங்கண்டுகிட்டதும்... ஆ! எதுரெ! பின் கதவு வழியே திறந்து நிக்கிற நூரி! இருட்ல கூட பால்ல குளிச்சு வர்ற மாதிரி நூரி அழகு! தூரத்திலிருந்து நடந்து வந்து கொண்டிருக்கிற பலி ஆடு காந்தி! - அதோ இருட்டு- இருட்டு - பாய்ந்து ஓடிய நூரியின் அணைப்பில் ரெங்கராஜன் மயிரிழையில்!

இருட்டுக் கொட்டிலில் - நூரி விழுந்தாள். ரெங்கராஜனோடுதான். ரெங்கராஜன் அவளுடன் முழுகினான். காந்தி? தப்பினான். அதுவும் மயிரிழை? ரெங்கராஜனிடம் காந்தி தப்பிய அன்றே நூரி ரெங்கராஜனுக்கு கொடுத்து வைத்தாள். நாநிம்மா மூச்சு வாங்கப் படி ஏறித் திண்ணையில் ஆயாசத்தோட விழுந்ததும் அன்னைக்கித்தான்! விடிஞ்சதும் ''நூரி ஓடிப் பொய்ட்டா'' என்றார்கள் தெருப்பெண்டுகள்.

''காஃபிர் பயலோடல்ல ஓடிருக்கா!'' என்று இளைஞர்கள் துடித்தார்கள்.

விடிந்தபோதே!...

ஹையத்பி என்ற நாநிக் கிழவி திண்ணையிலிருந்து வாயிலோடு நீரோட 'மௌத்' ஆகிக் கிடந்தாள். வாயில் எறும்புக் கூட்டம்! கண்ணில் ஈ சுழன்று அமர்ந்தது.

நூரி வீட்டில் - ஒரு சத்தமில்லை. மொதலாளி சத்தமில்லாமல் முட்டை சேமியா சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பலர் நம்பவேயில்லை. நூரி சந்தனமாச்சே சேறுல விழுந்தாச்சே! என்றார்கள். நாலாபுறமும் ஆட்கள் தேடிப் பறந்தார்கள்.

பாகு ஊற்றி நிறம் மணக்கச் செய்த திக்டி பாகு முட்டைச் சேமியாவை பீங்கான் குழிக் கரண்டியில் பாலை ஊற்றி சாப்பிட்டுக் கொண்டிருந்த செய்துள்ளா மொதலாளி ஒண்ணும் அலட்டிக்கல்லெ. பெரிய்ய உருவம். கண்

சிவந்திருந்தது. மூசுமூசு என்று மூச்சு விட்டபோது சாப்பிட்டது கூடத் தாங்காமல் வேர்த்து ஊறிக் கிடந்த அவரது தொந்தி, மேலேறி மேடு தட்டி கீழிறங்கிக் குழிவிட்டது.

''தேத்தண்ணி கொண்டாடீ!'' கத்தினார்.

வெள்ளைப் பீங்கான் கிண்ணம் அதில் கொழுப்பு மிதக்கும் டீ! அழுதழுது சிவந்த கண்ணோட மொதலாளியோட நாலாவது பெண்டாட்டி மெகர் கையிலேந்தி வந்தபோதும் மொலாளி அசையவேயில்லெ. மெகர் போதும் இப்போதைக்கு. பகலும் போதும். சிவப்பான தேத்தண்ணி ரோசாக்கலராகி பாலோடு குழம்பி மெகர் மாதிரியிருந்தது. ச்சீ!

''ஓடுகாலி நாயி ஓடிப்புட்டா ஏம்ளா அழுவுறீங்க? அல்லாவுக்குத் தெரியாது! ஓடீட்டாளாம்! இதுவ அழுகுது! சை! கையில ஆம்படட்டும்! ஷைத்தான்!'' பொருமினார். நூரி அகப்படவேயில்லை.

லத்தீஃப் அலைந்து திரிந்தபோது ஒரு நாள் பகலில் மணிக்கூண்டுப் பக்கம் ரெங்கராஜனைப் பார்த்ததும் பாய்ந்தான். பக்கத்தில் மௌல்வி சாஹிப்! ''ஏய்! நிறுத்துங்கய்யா! அவரு முஸ்ஸல்மானாய்ட்டாரு. இனிமே அதெல்லாம் வாண்டாம். அல்லாஹுத் ஆலா கருணைனால அவரு நம்படவங்க ஆயிப்புட்டாரு! நம்பள்ள அவரும் ஒரு விசுவாசி! லத்தீஃப்பு! அவரும் நம்ம ஆளு! நாமதான் பாதுகாப்பு! நம்ப கொமரு! நம்ப சகோதரி!''

சொல்லிக் கொண்டேயிருக்கும் போதே லத்தீஃபு முஷ்டியை மடக்கி ரெங்கராஜன் முகத்தில் ஒரு குத்து!'' ஹம்மக்!'' என்று கத்தியபடியே எட்டி ரெங்கராஜன் வயிற்றில் சுழட்டி ஒரு மிதி! ''ஹா'' என்று ஒரு அலறல்! வரும் என்று எதிர்பார்த்த மௌல்விக்கு ஆச்சரியம்.

திடீரென்று மரம் மாதிரிச் சாய்ந்து உருண்டான் லத்தீஃப்பு. இல்லை! தூக்கியடித்தது ரெங்கராஜன்! தூக்கி எறிந்ததை யாரும் பார்க்க முடியாது. ''பளிச்!'' அவ்வளவுதான். நாலு பேர் தடுத்து நிறுத்து முன் லத்தீஃப்பு வாய் கிழிந்து ரத்தம் ஒழுகியது.

ரெங்கராஜனைப் பத்துப்பேர் தள்ளிப் பிரிக்க முயன்று கொண்டிருந்தார்கள். லத்தீஃப்பு எகிறிக் குதித்துக் கொண்டிருந்தான். உதடுலேந்து ரத்தம் புளியாய் வாயுள்ளும் வெளியுமாய் வழிந்தது ரெங்கராஜனுக்கு. கூட்டம் கூடியும் முக்கலும் முனகலும் கூட்டம் ஞாயம் பேசியது. எல்லோரும் பிரித்துவிட்ட பின்னும் பிசிபிசுத்தது ஆத்திர வேகம்.

நூரி வரவேயில்லை. அன்னைக்குப் போனவள் போனவள்தான்.

முத்தலிஃப்பாக ஆக்கினாள் ரெங்கராஜனை. பள்ளி வாசலுக்குப் போகச் சொன்னாள். துணி துவைத்துப் போட்டாள். கொஞ்சமாய்க் கறி வாங்கி வந்து மணக்கச் சமைத்து ரெங்கராஜனை உட்கார்த்தி பரிமாறி ஊட்டிக் காட்டினாள். பிர்னிக் கஞ்சி அவனுக்கு ரொம்ப இஷ்டம்.

ரெங்கராஜனை எல்லாரிடமும் முத்தலீஃப்பாகச் சொன்னாள். நகைகளை விற்று, அவனுக்கு டெட்ராக்ஸ் ஸ்லாக் ஷர்ட் வேட்டி எல்லாம் சிங்கப்பூர்

சாமானாக வாங்கிப் போட்டு விட்டாள். வீடு சமைந்தாள், பசியாறிப் பசியாற்றி மலர்ந்தாள். முதலில் எதிர்த்த முஸ்லீம்கள் வீடு வீடாகப் போட்டி போட்டு நூரியையும் முத்தலீப்ஃபையும் அழைத்து விருந்து ஊட்டினார்கள். அல்லாஹுத் ஆலாவின் கருணை!

ரெங்கராஜனை மடியில் போட்டு கொண்டு அவன் முஸ்லிமாக ஆக வேண்டிய அவசியத்தைச் சொன்னாள். நபிகள் குரைஷிக் கூட்டத்திடம் பட்ட அவதிகளைக் கதைகதையாகச் சொன்னாள். ரொம்ப நேரம் அவனிடம் பேசிக் கொண்டிருக்க முடியாது. கல்லில் செதுக்கிய அவன் மார்பு, கெட்ட பழக்கங்கள் ஏதுமில்லாத அவன் ரத்தத்தின் அனல் அவளைச் சும்மா விடாது. நாஜ்மாவின் குடிசையில் ஒளிந்து கிடந்தபோது காடு புகுந்த மதங்கொண்ட யானையால் கடலைக் கலக்கிய ரெங்கராஜனை அவள் தடுத்ததில்லை! மூன்று மாதம் பகலிரவு தெரியாது. சூடு குளிர் புரியாது. வலி தெரியாது. வேறெதுவும் கண்ணீல் படாது! லட்டு மிட்டாய்தான் அவன்!

பகல் முழுவதும் பேயாய் அலைவான். இரவு மிருகம் போல் வந்து விழுவான். நூரியும் அவன் போக்கிற்கு ஏதும் மறுத்தேயில்லை. காரணம் அவன் என்பதே அதுதான். திடீரென்று வெளியேயிருந்து ஒரு விஸில் சத்தம் ''உய்...ய்...ய்ய்...ய்'' நூரியையே புரட்டித் தள்ளி உருவி எழுந்து மந்திரம் பாய்ந்ததுபோல் நிற்பான் முத்தலிஃப்பு, உடம்பு முழுவதும் பொட்டுப் பொட்டான வியர்வை பொடிய முன்னிரவில் அவன் மனத்துள் சூழ்ந்து போயிருந்த நூரி துடித்துப் போய் கிடப்பாள். அலட்சியமாய் கைலியை மடித்துக் கட்டியபடி அவளைத் திரும்பிப் பாராமல் மெல்லக் கதவைத் திறந்து கொண்டு வெளியே போவான் முத்தலீஃப்பு.

முத்தலீப்ஃ என்கிற ரெங்கராஜன் அப்போது அதே நாலு மணி இருட்டில்...ஆடக்காரத் தெரு முனையில் நாகுச் செட்டியாருக்காக மோட்டார் ஸ்ப்ரே பெயிண்ட் கம்பெனி ஒன்றின் மெக்கானிக் சுந்தரம் என்கிற நாயுடு பையன் ஒருவனை செமத்தியாக விட்டு வாங்கிக் கொண்டிருந்தான்...முன்பே செய்த ஏற்பாடு! சுந்தரத்தின் பொண்டாட்டி ஒரு பிராம்மணப் பெண். குய்யோ முறையோ என்று கூச்சலிட்டு ஆட்களைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தாள். யாரும் வரவில்லை. வீடுகள் கதவுகளையும் ஜன்னல்களும் திறந்து கொண்டு பார்த்தன.

உள்ளேயும் இருட்டு, பின்பு உடனே தானே அவைகள் சத்தப்படாமல் பூட்டிக் கொண்டன. சுந்தரம் ரத்தம் கக்க ஆரம்பித்தபோது அவனோடு ஓடி வந்துவிட்ட அந்த பிராம்மணப் பெண்ணை நாகு மொதலாளியுடைய ஆட்கள் தூக்கிக் கொண்டு போனபோதும் யாரும் வரவேயில்லை. நாகு மொதலாளியுடைய ஷெட்டுக்குப் போனபோது விடிந்தது...

முச்சந்தியில் பிராம்மணப் பெண்!

''என்னா முத்தலீஃப்பு?! கொடுத்ததை வாங்கிக்கிறே? புது மாப்ளெ இல்லியா நீயி?!''

''புது மாப்ளைன்னா என்ன?''

''அடப் போப்பா அந்தக் குட்டியை ஷெட்டுக்குக் கொண்ணாந்தாச்சா''

''உங்க ஆளுங்க கொண்டாந்தாங்களே!''

''சரி இந்தா இன்னும் ஆயிரத்து நூறு!''... விடிந்தே போய்விட்டது... முத்தத்தில்-ரத்தத்தில் நனைந்து சட்டையை அலசிப் பிழிந்து கொண்டிருந்த முத்தலீஃப்பை பார்த்தபோது நூரி வயிறு எரிந்தது. ஆத்திரம் வேறு.

என்ன மனுஷன் இவன்? ச்சே! நிக்கா செய்து கொண்டபோது இவனை மனுஷனாக்கி விடவேணும் என்ற துடிப்பும் தைரியமும் இருந்தது.

ராத்திரியில் பல நாட்கள் எங்கே போவான் என்று கண்டுபிடிக்க முடியாது. எப்போதும் அவனைத் தேடி பணக்காரர்களின் ஆட்கள், பெரிய முஸ்லபம் வியாபாரிகள், அரபி ஷேக்குகள் கூட எப்போதும் பையில் வதியழியும் பணக்கற்றைகள், வெளிநாட்டுச் சாமான்கள். அவனோ ரெங்கராஜனாகவே யிருந்தான். முத்தலீப்ஃபு என்று யாரும் கூப்பிட யோசிக்கிறார்கள்.

பகல் நேரம் முழுவதும் ஒளிந்து ஒளிந்து வருவதைப் பார்த்தாலே நூரிக்கு அடி வயிற்றைக் கலக்கும். கண்ணாடிப் ப்ளேட்டில் ஆவி பறக்கச் சோறிட்டு மீன் குழம்பை மீனுடன் ஊற்றியிருந்தாள். நல்ல விறால் மீன் துண்டங்கள் லேசில் சாகாத மீன். முத்தலீப்புக்கு ரொம்ப பிடிக்கும். எதிரே உட்கார்ந்திருப்பான். திறந்து கிடக்கும் சட்டை வழியே மார்பைப் பார்ப்பாள் நூரி. மார்பில நீல நிறமாக ரத்தம் கன்றியிருக்கும். அடியா?

''என்ன மாமு இது?''

''ஒண்ணுமில்லெ!''

''என்ன ஒண்ணுமில்லெங்கிறீங்களாம்? கண்ணிக் கெடக்கு அப்படியே...'' மூடி சட்டையை இழுத்துவிட்டு பட்டன் போடுவான். மறைப்பான். நூரி கண்கலங்கி சிலை மாதிரி நிற்பாள். சொட்டு சொட்டாக ரத்தம் கால்களில் அவன் பெருவிரல் நசுங்கி ரத்தம் கட்டியிருக்கும். ஒன்றும் பேச முடியாது. ரத்தம் அவனுக்குத் தண்ணீர் மாதிரி ருசிக்கும் ரத்தம்.

''பாப்பூ! உம்மா!'' - கதறி அழுவாள் நூரி.

கொஞ்சமும் அசர மாட்டான் முத்தலீஃப்பு. அமைதியாய், பரபரப்பில்லாமல் பார்த்துக் கொண்டே நிற்பான். மெதுவாகக் கதவு திறக்கும் சத்தங் கேட்டு அழுதபடி தலை நிமிர்த்திப் பார்ப்பாள் நூரி.

''இப்டிகூட ஒர ஆம்பளை உண்டா?'' என்பாள் நாஜ்மா. நாஜ்மாவெ நாலாவதாட்டியா கெட்டிகிட்டான் ஒரு டீக்கடைக்காரன். நிக்காவுக்கு நூரியும் போய் விருந்து சாப்பிட்டு விட்டு வந்தா. நாஜ்மா மீன் கடையில் பொறுக்கித் திரிந்ததெல்லாம் தெரியும். அத்தனை கஷ்டம். இப்போ அவள் போடுற ஆட்டத்துக்கு அவ வூட்டு ஆம்பளை கூடவே திரியிறான். சினிமாவுக்கு நாஜ்மாவோட போறது திருவிழா மாதிரிதான். மூணே மாசம்! கர்ப்பம் ஒண்ணு கலஞ்சு போயும்கூட 'குழிப்பிள்ளை மடியிலே'ன்னு ஒண்ணு ஒன்பது மாசத்துலியே பெத்தெடுத்துட்டா... நூரியும் பாத்துகிட்டேதான் இருக்குறா.

ம்ஹுூம். பொசு பொசுன்னு பூனெக் குட்டி மாதிரி நாஜ்மாவும் குளுகுளுன்னு கறுப்பானாலும் மூடிகிட்டே திரியிற சொகுசுப் பொண்ணு இல்லெ. மீன் மார்கட்டுல மீன் விக்கிறவ. ஆனா எப்டிப் பொளைக்கிறா?! புருஷனோட ஒண்ணா?

...நூரி ஓடியாந்தது அல்லா! இதுக்குத்தானா அல்லாஹு 'ரப்பே!' ராத்திரி மட்டும் ஓதுங்காது! ஓயாது தினம் மூணு வேளை! அதுவும் மூணு வேளை! பின்னேர ராத்திரிக்காக அவன் உடம்பின் தேன் மணந்து சொட்டும் வேளைகளுக்காக... நூரிக்கு அவன் முரட்டுப் பிடிகள் சாதாரணம். அவன் பலம் அவளுக்கு அத்துபடி! பெரிய வஸ்தாத் - உஸ்தாத்களை எல்லாம் தூக்கிப் போடும் அவன் உடம்பின் திமிர் அவளுடையது! நூரி படிக்காத பெண்! ஆனால் தினமும் ரெண்டு வேளை குரான் ஓதுகிற பெண். மதுரஸா பள்ளிக்கூடம் போய்ப் படித்தவளில்லை. வீட்டிலேயே அராபியும் உருதும் படித்தாள்.

தினமும் இருட்டில் சந்து முனையில் யாருக்கும் தெரியாமல் அவளைக் கண்டுபிடித்து அமுக்கிக் கொண்டது ரெங்கராஜனுக்கு மட்டும்தான் புரியும். இப்போது ராத்திரி அகால வேளையில் அக்பர் லாலா சந்து கல்லுக் கம்பத்தின் அருகில் இருட்டுக்குள் எப்போது வருவான் என்று காத்துக் காத்து பல வேளைகள். விடிந்தும் அவள் நிற்பதை தெருப் பெண்கள் கலக்கத்தோடு பார்ப்பார்கள்.

எல்லாருமே பர்தா போட்டுக் கொண்ட பெண்கள் அல்ல. பாதி பேருக்கு பர்தா போட்டுக் கொள்ளும் தத்கீர் கிடையாது. விதியும் பணமும் வாழ்வும் மோதும் சூது. ஏழ்மை முக்காடு என்று - யாராவது ஆம்பளை அந்தப் பக்கம் வந்தால் சேலையைச் சுழற்றிப் போடுவார்கள். அது பாவனை மட்டும்தான். பாம்பாட்டித் தெருவுக்கு வந்தும், குடிசைக்கு வந்து விழுந்தும், பர்தா போடுகிறவளாகவே இருப்பவள் அங்கே நூரி மட்டும்தான்.

முத்தலீஃப்பு நிறையத்தான் சம்பாதித்தான். திடீரென்று பதினைந்து நாள் காணாமலே போய்விடுவான்... அப்போதெல்லாம் நூரி ஒற்றை விளக்கேற்றி குர்ஆன் ஓதிக் கொண்டேயிருப்பாள். நூரிக்கு கனவுகள் ஏதும் கிடையாது. ரெங்கராஜன்தான் கனவு!

யாரையாவது... யாருக்காவது... வெட்டித் தள்ளிவிட்டு வந்திருப்பான். முத்தலீஃபின் உலகம் அவளுக்கு நன்றாகவே தெரியும். அங்கே எந்த தர்மத்துக்கும் ஒரே பதில். அடிக்கு அடி, கண்ணுக்குக் கண்; பல்லுக்குப் பல்; உயிருக்கு உயிர்; குலை நடுக்கமும்...பயமும்... இல்லாத நாளும் கிடையாது. ஆனால் முத்தலீஃப் இரவுகளில் அரசன். ராணியிடம் வந்து சேர்ந்துவிட்டால்... அவன் பூந்தி நெய் லட்டுதான்! அத்தனை இனிப்பு! மயக்கம்! புதையல். அவன் போய் நூரி தனியே நிற்கும்போது வீடே வெறிச்சிட்டுக் கிடக்கும் பகல்கள் அகண்டு போகும். வராத நாட்கள் பெருகும்போது வீடு முழுசும் அப்படியே போட்டு வைத்திருப்பாள் நூரி.

பெட்டியில் ஏராளமாய் பணம் கிடக்கும்! எடுக்க மாட்டாள்! ஏன்? தெரியாது. அவன் வந்ததும் கத்தை கத்தையாக பெட்டியில் போட்டுவிட்டு அவளிடம் சொல்வான்.. ''மூவ்வாயிரத்தி எளனூறு போட்டேன்'' அவள் திரும்பி பார்க்கமாட்டாள்! மடியில் கண்ணைப் பறிக்கும் வெளிநாட்டு ஜார்ஜெட் சேலை வந்து விழும். உடுத்த மாட்டாள்! அவன் கேட்க மாட்டான்.

''ஏண்டி கட்டிகிட்டா என்ன?'' என்றாள் நாஜ்மா. அப்டியே தூக்கி அவகிட்ட குடுத்து அனுப்பீடுவா. தாஜ்மா அந்தச் சீலையெத் கட்டிகிட்டு வாரதையும் போறதையும் முத்தலீஃபு பார்ப்பான். ஒண்ணுஞ் சொல்ல மாட்டான். நூரிக்கு முத்தலீஃப் போதும். ரெங்கராஜனும் வேணும்!

அவன் அந்தி சந்தியில் பள்ளி வாசல் போறது ஒண்ணுந் தப்பாது. தொழுகெ முடிச்சு வர்றதைப் பாக்க எப்பவாவுது காத்து நிப்பா நூரி! ரொம்ப சந்தோஷமா சிரிச்சுக்குவாங்க. ரெண்டு பேரும் பெரிய பெரிய வெள்ளைக் கிண்ணங்களில் கோழிக் கறி பொரிச்சுச் சின்னச் சின்னக் கிண்ணங்களில் குர்மா நெய் சாதம் போட்டுச் சமோசா வெச்சு ஏந்தலான பூப்போட்ட பீங்கான் தட்டு மலேயா கிண்ணத்துல வெள்ளை வெளேர்ன்னு சாதம் படைச்சு முத்தலீஃபெ பசியாற அழைக்கிற நூரி 'ஆச்சர்யம் தர்ர பொண்ணுதான்.'

முத்தலீஃப் ராஜம்மாவெ நெனைச்சுக்குவான். அவளும் ஊட்டி ஊட்டி வளத்தவதானே! சாப்பிட்டு கிட்டு இருக்கும்போதே எடுத்து எடுத்து ஊட்டுற வேலை நூரியால மட்டுந்தான் முடியும். கோழிக்கறியெ அதக்கி எலும்பெக் கழட்டி சிவப்புச் சாந்தோட பொறிச்ச கறிப் பத்தையெ நெய்யோட ஒழுக அவன் வாயிலெ எடுத்து வெச்சா வாய் தொறக்காதா என்ன? நெய் சாதம் வியர்வையெக் கௌப்பும். முத்து முத்தா வியர்வை சொட்டச் சொட்ட காரமாய் நாக்குத் தட்டி அவன் சாப்பிடுகிறதைப் பார்த்தே பசியாறீடுவா நூரி! அப்றமா அவளால அப்டியொண்ணும் ருசிச்சுச் சாப்ட்டுட முடியாது. அவனோடையே எழுந்திரிச்சி படுக்கை போட்டுடுவா. வெறும் பெண்ணா இருந்தா நூரி என்னைக்கோ வாப்பா ஊட்டெத் தேடீட்டுப் போயிருப்பா திரும்பியும்! அவ இப்போது முத்தலீஃபுவின் மனைவியாச்சே. அவளை அவன் உயிராக மதிக்கையில் எப்படிப் போவது?

ஆனால் கல்யாணம் - நிக்கா எல்லாம் இவனை ஒண்ணும் ப்பண்ணலை. கட்டுபட்டு வாழற ஆளுமில்ல முத்தலீஃபு. எவனுக்கும் பயப்படற ஆளு இல்லெ. மாசம் மூணு தடவெ போலீஸ் ஸ்டேஷன்லெ கையெழுத்துப் போட்டுக் காட்டி 'இங்கதான் - ஒழுங்கா - இருக்கேன்'னு டம்மியடிச்சுக் காட்ட வேண்டிய புள்ளி. அவன்னா... எவதான் வந்து இவனோட வாழ வருவாளுவ!?

நூரி மாதிரி எவளாவுது இருக்கிறதானா அதுக்கு இதெல்லாம் காரணமில்லே. நூரி முத்தலீஃப்பெ தேடிகிட்டும் எஞ்சியும் போக மாட்டா. அது வேற! மொதலாளி ஊட்டுப் பொண்ணாச்சே அது வேற! ராத்திரீல மட்டும் தெருச்சந்து மொகனையில வந்து நிக்கிறாளே நூரி? அது மட்டும். அது வேற!

அன்னைக்கும் ராத்திரி மூணு மணி தெருச் சந்து கல்லுகிட்ட நிக்கிறா நூரி! பத்து நாளா முத்தலீஃப்பு இல்லெ. வீடு பூரா தூசி படிஞ்சி கெடக்கு. நூரி கூட்டல்லெ. கழுவல. சமைக்கல்லெ. வாச தெளிக்கல்லெ. தெருவு பெருக்கல்லெ. அவனெ நெனைச்சாப் போதும் மனசு பெருசாகிப் போகுதே ஏன்? செத்துப் போன நாநிம்மா சொல்லுமே ரெங்கராஜு உடாதடீ குட்டி. அவன் பாக்கத்தான் பூனெ!

உன்கிட்ட பாலு குடிச்சாப் புலியாய்டுவான்னு எத்தனை மாசமா... அவன் இப்டியே... பொறுக்கித் திரிஞ்சு... இதுலியே அழுந்திப் போய்... நாஜ்மா மீன் மார்க்கட்ல எப்டிப் பொறுக்கீட்டு ஏந்தப் பொளைச்சி அலைஞ்சவ? எவன் அவள கட்றேன்னான்? ஒரே புடியா இருந்து, எதுக்கும் வளைஞ்சு குடுத்துடாமெ, எல்லாரும் என்ன சொல்கிறாங்கன்னு கவலைப்படாமெ, நாலாவதாப் போறமே ஒரு கொமருன்னு யோசிக்காமெ... தீர்மானம் பண்ணி டீக்கடை சாச்சாவெக் கெட்டி புள்ளையும் கெழங்கு மாதிரி பெத்தெடுத்துட்டாளே குட்டீ! ''நூரீ! அவளெப் பாத்து ஏங்கற கதையாச்சேடீ பொண்ணே! நாநிம்மா!''

எவ எவ தாலியறுத்து...எவ எவ பொழப்புல மண்ணள்ளிப் போட்டு... அல்லாஹு! முத்தலீஃப்பு இப்டி ராத்தங்காமெ அலஞ்சு... என்னா பொறவியிது? என்னா ஆம்பளை இவன்? இஸ்லாம்ன்னா சமாதானம்! இவனெக் கட்டிக்கணும்ங்கிறதுக்காக இவனெ இஸ்லாத்துல சேத்து முஸ்லீமாக்கி...

இந்தப் பத்து நாளா ஒரு வேளைதான் சாப்பாடு நூரிக்கு. வாசலுக்கும் கொல்லைக்குமா அலைஞ்சு கால் கடுத்துப் போகும். ராத்திரீல தூக்கம் அண்டாது லேசா பலாமரத்து எல உதுந்தாக்கூட 'பொட்'டுன்னு சத்தம் எழுப்பி விட்டுடும். விடியும் போது தெருல போற நெல்லு வண்டி 'கட்டக் டட்டக்' சக்கரம் குடுக்குற சத்தம் முழிக்க வெச்சுடும். முழிக்கணுமா? அவ தூங்குனாத்தானே?!

''என்னப் படச்ச அல்லாவே...!''

எழுந்து உட்கார்ந்து கொள்வாள் நூரி. ''பாப்பூ! உம்மா! நானு தனிய்யா இருக்கேன். ஆரும் இல்லெ. அல்லா இருக்கான். தோ குரான் இருக்கு. புழுதிபடிஞ்ச ஊடு இருக்கு. திசையெல்லாம் பரவுது சூர்ய வெளிச்சம் என்று சொல்லிக் கொண்டு இருக்கும்போதே பதைத்து நின்றாள் நூரி. தெருமுனையில் நீண்ட நெடிய நிழல்! நிழலுக்குத்தான் எத்தனை சக்தி! பாய்ந்து ஓடினாள் நூரி. தெருவில் யாருமில்லை. இருட்டு அமிர்தமயமாய் சந்துக்குள் பாய்ந்திருந்தது. வலிமை வாய்ந்த அவன் கரங்களில் சிறையாகிப் புதைந்து நெஞ்சுக்காட்டுக்குள் எங்கோ அழுந்திப் போனாள் நூரி! முத்தலீஃப் வாரி அள்ளி அவளை எடுத்துக் கொண்டு வீடு வரை நடந்தான். எப்படி இவனால் இப்படி இனிக்க முடியும்? எப்படி இவன் வரிந்து சுற்றி உள்ளிமுத்துக் கொள்ள முடிகிறது? அவனைக் காணோமே!

வீட்டுக்குள் நுழைந்ததும் அந்த வீடு முழுவதும் செயலிழந்தது. சோலை ஒன்று விரிந்து அருவி ஒன்று பாறையைப் பிளந்து கொண்டு பாய்ந்தது. நிலவு ஒன்று உருகி சூரியன் ஒன்று பாளம் பாளமாய்ப் பொடிந்து - பூ ஒன்றில் மகரந்தமாய் நுணுங்கிப் போனது நூரிக்கு மட்டும் உணர முடியும். முத்தலீஃப்பு நூரியைத் தலைகீழாய்ப் புரட்டிப் போட்டான். அப்போதுதான் நூரி கண் விழித்துப் பார்த்தாள் உலகத்துள்ளே! ரெண்டு பேரும் ஒருவரை ஒருவர் பார்த்தே மௌனமாகிக் கிடந்தார்கள். இரவு இன்னும் அவர்களை உறக்கி விடக் காத்திருந்தது.

நூரியின் கண்கள் உஷ்ணத்தால் கதகதத்துக் கரித்தது. பேச்சில்லை. இவன் இப்படித்தான் இதில்தான் நாசமே! வந்ததும் வீழ்த்திவிடும் வசம். இன்னும் அவளை ஆழத்தில் புதைக்கும் சதி! இவனை மீற இவள்- இவளையே மீறியாக வேண்டும். பசிக்க பரிதவிக்க அடித்து - சாகவிருக்கும் கணத்திலேயே அமிர்தவர்ஷத்தால் மூழ்கடித்து மூச்சுவிடக்கூட நேரம் தராத இவன்! இவனை அழித்தாலன்றித் தப்பவே முடியாது... நூரியின் மூச்சு முட்டியது. அத்தனை இன்பம். உதடுகள் புதைத்து உதடுகளில் நைந்தன.

அவன் எழுந்து நின்றான்! பேசவில்லை. பேசுகிற ஜாதியல்லெ. மிருகம்! ஆ! அவளை அள்ளி எடுத்து அப்படியே உரத்து...

இப்போது லட்டு மிட்டாய் நெய் வாசமில்லை. ஆசையில்லை. ருசியில்லை. இவன் 'அவனி'ல்லை! இருட்டில் நின்ற நூரிக்குப் பயம் செத்தது. இனி அவளுக்குப் பயம் இல்லை. திமிறி உதறினாள். முத்தலீஃப்பை கரணை கரணையாய் அவன் பாறையான மார்பில் அழுந்தினாள். மறுபடி திமிறி உதைத்தாள். கைகளால் போராடினாள். அவன் வலிமை ஆச்சர்யமானது. பத்து பேரை ஓரடியில் வீழ்த்தும் ரத்தத் திமிர் அவனது! அடியற்ற ஆழத்தில் அவனைப் புதைத்து மீண்டும் கவிந்து அவள் மேல் பரப்பி கால்களாலும் அவளைக் கவ்வி உறிஞ்சினான் முத்தலீஃப்.

அவன் முடிச்சில் நூரிச் சிக்கிச் சுருண்டாள். மேலமுந்தி உள் வாங்கிய அவன் வளைத்து அவளைச் சுற்றி இறுகினான். பாய்ந்த அமுதத்தில் நீந்தினாள். இருட்டு! கண் விழித்துப் பார்த்தபோதும் இருட்டு! அமுதப் பரப்பில் நீந்தி வருகுது ஒரு குழந்தை! நரம்புகள் பால் சொரியத் தயாராகிக் குழல்கள் பாலால் நிரம்பின. இருட்டு! விழித்துப் பார்த்ததும் அழுந்தியது இருட்டு! இரண்டு வினாடிகளில் அமுதத்தில் பாய்ந்து அவள் வயிற்றில் பாய்ந்து வந்த குழந்தை! ஆ! ரெங்கராஜனா இதுவும்!

சின்ன முத்தலீஃபா? ...யா அல்லா!...

இப்போது பாய்ந்து நெக்கி அவள் உதடுகளைக் கவ்வியிழுத்து முத்திக் கொண்டிருப்பது யார்? இருட்டு! அவன்தான் பாவி! அவனேதான். முத்தலீஃப்புதான்! மறுபடி எப்படி இழந்தாள்? மூன்றாம் முறையாக உயிரைப் பிடித்துக் கொண்டு உயிர் நிலையில் மிதித்தாள். இப்போது அவன் விட்டான். பிடி நழுவி அவள் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள். எத்தனை நாள் இப்படி இந்த நாசம்! என்ன தத்கீர் இது? வினையா? அவனைப் போல ஒரு

குழந்தை! தாயைத் தனிக் குழியில் புதைக்க வரும் குழந்தையா? அப்பனைப் போல் தெருவில் அலையும் அடியாளாக அதுவும் - இன்னொரு தாயைக் காலடியில் மிதிக்குமா? அதற்கும் திமிரும் ஆண்மையும் அழுத்தும் பாரமும் இனிக்கும் உடம்பும் இருக்குமா? அதுவும் எவளையாவது இழுத்துக் கொண்டு போய்த்தள்ளி உடம்பால் உடம்பை அடித்துத் தள்ளி, உடம்பால் உயிரைக் காவு கேட்குமா? அதுவும் குழந்தை முத்தலீஃபா...

இருட்டு...! மழை மேகம் நெருக்கி கயிறு போல் சுருட்டிக் கொண்ட முறுக்கிய இரவு!

முத்தலீஃப் அப்போதும் அயர்ந்து அவள் மேல் கிடந்தான். மீண்டும் நூரிக்கு உணர்வு திரும்பியபோது அவள் மேல் கவிந்து கிடக்கும் அவன் கரங்களில் மீண்டும் மீண்டும்... வியர்வையில் பளபளத்த அவள் உடலின் இனிப்பு இப்போதும் தகித்தது. அவன் விட மாட்டான். கட்டிலில் கட்டியடித்த மிருகமாய் இனியும்... இனியும்.... இன்று அவள் வயிற்றில் புகுந்த அவன் குழந்தை! அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. அது அவனேதானே...! அவள் தப்பவே முடியாது என்ற குபீர்ப் புரட்டல் அடி வயிற்றிலிருந்து எவ்வி உச்சந்தலையில் மோதியது.

அவன் அவளை இப்போது முத்தமிட்டுக் கொண்டிருக்கிறான். அடுத்த புயல் தலைக்கு மேல் சுழன்றது. விடிந்து நாலு மணியிருக்குமா? குடிசையின் கூரைகளில் கோடை வானத்தின் அவசர வட்டங்கள் சுழல்வது புரிந்தது. விடிய விடிய அவன் விரல்களில் பிதுங்கிய அவளது நெஞ்சு சுழண்டது போல் வலித்தன. அமுக்கி ஒரு பிடிபிடித்து கவ்வினான். 'ஹம்மா!... இப்போது அவன் இனிப்பதெங்கே? வியர்வை மட்டுமீறி வடிந்தது இடம் தராமல் பிடி விடாமல் சொடுங்கிச் சுருண்டு அவனிடம் யாசித்தாள் நூரி...! ''வாண்டாம் மாமூ! நெருப்பாய் எரியிது! போதும்!''

''என்னட்டீ போதும்! சாத்தான் வா!'' என்று முழங்கினான்.

அவன் எதிர்பாராமல் அறையின் ஒரு பக்கமாய்ப் போய் விழுந்தான். தூக்கி எறியப்பட்டதும் வலியுடன் உயிர்நிலையில் அவள் மிதித்த மிதியும் சொடுக்கி வலித்தது... நூரிக்கு ரகஸ்யம் அவனோடு புரிந்தது. சண்டையில் அவன் பலம் புரியும் முன் எதிரியின் பலம் பார்த்தாக வேண்டும்? அவளால் இனி மிருகம் போல் மிருகத்தோடு பலப்பரீட்சை செய்ய முடியாது. விழுந்த வேகத்தோடு அவன் இப்போது வரப்போகிறான்... பாய்ந்து கசக்கி மீண்டும் குழியில் தள்ளி மீண்டும் அவளை உறிஞ்சி இல்லாமல் செய்ய இதோ... இருட்டுக்குள் அவளை அடைத்து... எங்கோ போய்விடப் போகிற முத்தலீஃப்பு இதோ... வரப் போகிறான்.

நினைக்கு முன் கருமலையொன்று அவள் மேல் இடி போல் சரிந்தது. இருட்டு! முத்தலீஃப்புக்கு மட்டுமா சொந்தம்? வயிற்றுக்குள்ளிருந்து குழந்தை கூப்பிட்டது! ''எழுந்திரும்மா! உம்மா! எழுந்திரி!'' கருமலை சரியுமுன் எழுந்து மின்னல் போல் இருட்டில் பாய்ந்த அவள் நூரியா? அவள் நூரியா? அல்ல! விலங்கில் பூட்டப்பட்ட அடியுண்ட மிருகம்! எட்டிப் பார்த்து, மிதித்தது நூரிதான்.

கீழே விழுந்த மிருகத்தின் கழுத்தில் ஏறித் திருகி விழுந்ததும் நூரிதான். இருட்டுக்குள் மிருகங்கள் இப்போது முட்டி மோதின. இனி அவளுக்கு இருந்த ஒரே புகல் அதுதான். நீண்டு கேட்ட அலறல் பக்கத்துக் குடிசைகளையும் வீடுகளையும் உலுக்கியது. அலறல் கதறலாகி நீண்டு ஒலித்தது. கதறல் ஒப்பாரியாக நேரமாகவில்லை. பக்கத்துக் குடிசைகளிலிருந்து ஜனம் பெண்டுகள் பிள்ளைகள் கூடி ஒப்பாரியாகி நீண்டு ஒலித்தபோது, ஆட்கள் பறந்தனர். முதலாளிமார்கள் வீடுகளுக்கும் பள்ளிவாசலுக்கும் செய்திகள் பறந்தன. முதலாளிகளுக்கும் சந்தோஷம்தான். ''தொலைஞ்சானா?''

விடிந்து ஒளி நீண்டு எட்டிப் பார்த்தபோதோ....

வீட்டுக்குள் நூரி வெளுத்துப் போன முகத்துடன் உட்கார்ந்திருந்தாள். நாஜ்மா ''என்னட்டீ நடந்தது?''

என்று முட்டி மோதியும் பயனில்லை. ''அடியாள் முத்தலீஃபெ யாரோ அவன் வூட்டு வாசல்லியே அடிச்சுக் கொண்ணு போட்டுருக்காங்க'' - என்ற பேச்சு எங்கும்!

முழங்கால்களைக் கட்டிக் கொண்டு உள்ளே உக்காந்திருந்த நூரியெ போலீஸ்க்காரங்ககூட ஒண்ணும் கேக்கவேயில்லை.

''யாராயிருக்கும் கொண்ணது?''

''காஃபிர் பயலெ செஞ்சுகிட்டாளே நிக்கா? வேணும் நல்லா!''

''கொண்ணது ரவ்வூப்ஃ மொதலாளிதான்! தெரியும்?''

''ல்லெடா! செய்துல்லாதான் செஞ்சிருப்பான். அவம் மவதானேடா நூரி!''

கண்ணீர் மல்க நூரியே கட்டிக் கொண்டு பெருமூச்சு விட்ட நாஜ்மா சொல்வா ''ரெங்கராஜூம் மச்சாம் மாதரி ஆம்பளெ யாரு இருக்கா துனியாவுல? பத்து ஆளெ உட்டு அடிச்சாக்கூட கீழ உழாது. ஒரு கைக்கி பத்து ஆளெத் தூக்கியடிக்குமே நூரி! அல்லாஹு படச்சவனே! ஆரு கொண்ணாங்களோ! நீதான் கேக்கணும். அடுத்த பொறெ கௌம்புறதுக்குள்ள மச்சானெக் கொண்ணவங்களே நீயே கேளு!''

தலைதூக்கிப் பார்த்தாள் நூரி. அழக்கூடாது. அழ முடியாது. அழ வேண்டாம்.

போஸ்ட்மார்ட்டம் முடிந்து வைக்கோல் திணித்த முத்தலீஃப்பை கொண்டு வந்து உள்ளே போட்டிருந்தார்கள். திரை போட்டு மூடியிருந்தது.

தாவுத் நடந்து கொண்டிருந்தது. நெய்ச் சோறு குர்மா, முத்தலீஃப்பு என்கிற ரெங்கராஜன் இப்போது யார்?

தெரு முழுசும் வந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். தெரு முனையில் அடிதடி! கூச்சல் யார் யாரோ... புழுதி கிளம்புகிறது. யார் யாரோ தெருவில் போய் நிற்கிறார்கள்.

அங்கே முத்தலீஃப் இல்லை.

திரைக்கப்பால் ரெங்கராஜன் வெள்ளைப் பாதங்கள் தெரிந்தபோது யாருக்கும் தெரியாமல் மௌனமாய்க் கதறி வாய் பொத்திக் கண்மூடி அழுதாள் நூரி, வயிற்றுக்குள்ளே குழந்தை உதைத்தபோது அழுகை நின்றது நூரிக்கு.

திகில் மீண்டும் இருட்டு சுழன்றது.

நூரியின் தலைக்கு மேல் மேகம் மூண்டு 'இடி'த்தது.

வயிற்றுக்குள் குழந்தையா? நிஜம்தானா.

நிஜம்தான்!

(புதியபார்வை, மார்ச் 95)

